உ

திருவருட்சகாயம்.

# பிளேக் அம்மை பூர்வரூபம்.

இஃது

திருவானைக்கா

மாஜி - டிப்டிசர்ஜன் ஜெனரலாபீஸ் ரயிட்டர்

ம-ா-ா-ஸ்ரீ, ஜே. என். வேணுகோபால் நாயுடவர்களால்

சித்தசாத்திரக் கோவை நூல்களிலிருந்து

சங்கிரகமாய்த்

திரட்டிச் சர்வசனோபகாரார்த்தமாகக்

கொண்டயம்பேட்டை

திருப்பிடவூர் தேவஸ்தானம் தர்மகர்த்தா

ம-ா-ா-ஸ்ரீ, ஆர். டி. சேகன்னாதராயரவர்களால்,

சென்னை:

இந்து யூனியன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1899.

திருவருட்சகாயம்

---

## நூன்முகம்.

நண்பர்காள் !!

மாட்சிமைதங்கிய இவ்வகன்ற வுலகத்தின்கண் சிறப்புற்றோங்கிய பொம்பாய் என்னும் நகரத்திற் பிறந்து பற்பலதேயத்தும் பரந்து நினைப்போர் மனதையும் நிகழ்த்துவோர் நாவையுஞ் சுடத்தக்கதான மகாபயங்கரமாகிய கூற்றினுங்கொடுமை மிகுந்துலகோருயிரைக் கொள்ளை கொண்டுலாவுங் கொஞ்சமும் நம்பத்தகாததான "பிளேக்"என்னுங் கொடிய விஷசுரத்தினியல்பியார்க்குந் தெரிந்தவிஷயமேயன்றோ.

மேன்மைதங்கிய நமதரசாங்கத்தா ரிக்கொடிய நோய்வரவொட்டாமல் வெகுவிதத்தாலும் பாதுகாத்தலானும் நம்முனிசிபாலிட்டியாரின் முழுமுயற்சியாலும் டாக்டர்களென்னுஞ் சிறந்த பண்டிதர்களின் அயர்விலாவுழைப்பினாலுமன்றோ இவ்வளவாயினுமிந்நோய் அடங்கியிருக்கிற தென்பதற்கு ஐயமில்லையென்பது திண்ணந் திண்ணம்.

அவ்வாறாயினும் இத்தகைய மிகபயங்கரமான கொடியவியாதிக்கு ரிஷிபுரோக்தமான அமுதமனையதோ ரௌஷதம் தேடிக்கொள்ள வேண்டுவதத்தியாவசிக மெனக்கருதிப் பற்பல நாட்டினுமுள்ள பண்டிதராதி பலகனவான்களிவ்வானைக்காவில் அழிவில் சித்தரனையோருங் கூடியோர் அற்புதவுருவெடுத்தது போன்று எம்மனோர்க்கருள் புரியுமாறு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் ஞானசித்தசுவாமிகள் சந்நிதானத்திற்குப் பலமுறையும் விண்ணப்பஞ்செய்துகொள்ள அம்மகானுபாவருமவ்வாறே இதுவெகு ஜனோபகாரமாதலாலிவ்வேண்டுகோளுக்கிறங்கித் திருவுளமுவந்து இக்கொடிய நோயின் உற்பத்தியையுஞ் சாஸ்திரோக்தமாகவதற்காகிய தக்க சிகிச்சையையுஞ் சங்கிரகமாக வருளி எஞ்ஞான்றுந் தம்மைவிட்டகலாது அநேகயோகீஸ்வரர்களும் பண்டிதர்களும் சாஸ்திரிகளும் பக்கலிலிருந்தும், அடியேனைக் கடாக்ஷித்து இதனைஅச்சியற்றிச் சர்வஜனோபகாரார்த்தமாய் வெளிப்படுத்த அடியேனுக்குஅஞ்ஞாபித்தவண்ணம் எட்டுணையேனு மருகனல்லனாயினுமய்யர் ஆஞ்ஞையை மறுத்தற்கஞ்சி அவ்வாறே யச்சியற்றுவானாயினேன். ஆதலினிதிலுறும்வழுக்களை நோக்காது காரியங்கருதுவதே கற்றோர் கடனாகும்.

இசற்காதாரமானவை அகஸ்தியமகாமுனிவரருளிச்செய்த ௮-௮௰. ௮௱-௮௲ என்னுமிவ்வற்புத நூற்கோவைகளேயாம். இவை கன்னிவாடி ஜமீன் மகா-௱-௱ மலைபாண்டி சுவாமிதுரையவர்கள் அரண்மனையிலும், செக்காலைக்குடி வடக்கரண்மனை மகா-௱-௱ சுப்பிரமணிய துரையவர்களிடத்தும், மீனாட்சிபுரம் வைத்தியம் மகா-௱-௱ நல்லசிவம்பிள்ளை யவர்களிடத்தும், நமது ஸ்ரீமத்ஞானசித்த சுவாமிகள் மடாலயத்திலுமுளது.

## மேற்கூறிய நூல்களாவன.

அகத்தியமகாமுனிவரருளிய திருமந்திரம் ௲௱௰-வது செய்யுள்.

எட்டெட்டெண்பதெண்ணூறுமெண்ணாயிரம்
விட்டவர்கெட்டார்வேதைமுகங்காணார்
பட்டப்பகற்போற்பதினெண்மருஞ்சொலுந்
திட்டமாங்கோவைநூற்சிறப்புடன்கண்டிடே.

## பரிபாஷை நானூறு.

அடக்கமுள்ள நூல்களிலே யின்னுமொன்று ஆயிரத்தி யிருநூறொன்றைந்நூறொன்று, உடற்குள்வளர் முப்பத்தொன்று எண்பத்தொன்று உற்றபதினொன்று ஈரைநூறொன்று, கொடுப்பவர்யார் மதிவெண்பாகவிதைநூறு குருநூலைம்பது மிதுவோர் கோவையாகக், கிடைப்பதில்லை பூர்வதவப்பயனாலெய்துங் கிடைத்தாக்கால் நூல்பதனங்கெதியுற்றோரே.

திருமூலநாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருமந்திரம் ௩௲-தில் திருமந்திரத்தொகைச்சிறப்பு இரண்டாவது செய்யுள்.

வைத்தபரிசேவகைவகைநன்னூலின்
முத்திமுடிவதுமூவாயிரத்திலே
புத்திசெய்பூர்வத்தமூவாயிரம்பொது
வைத்தசிறப்புதருமிவைதானே.

சர்வவியாபியென்னுமதிகாரத்தில் ௨௧-வது செய்யுள்.

மூலனுரைசெய்தமூவாயிரந்தமிழ்
மூலனுரைசெய்தமுந்நூறுமந்திரம்
மூலனுரைசெய்தமுப்பதுபதேசம்
மூலனுரைசெய்தமூன்றுமொன்றாமே.

இத்தகையவின்னும் பலரிஷிகளால் திருவாய்மலர்ந்தருளிய மிக்கப்பயன்படுவதான கோவைநூல்களனந்தமுள.

இதுவுமன்றி வடமொழியில் உமாகலாஞான மென்னுங் கிரந்தத்துள் எழாவது படலத்தில் சொல்லிய அம்மைநோய் நிதானமும்-சித்தநாகார்ச்சுனத்தில் சொல்லிய விஷசுர நிக்கரகமென்னும் பாகத்தையுங் கொண்டயம்பேட்டை பிரமஸ்ரீ ராஜாகனபாடிகளென்று வழங்கும் சாமிநாத கனபாடிகளாலும் - மகாவித்வான் கிருஷ்ணாச்சாரியார் அவர்களாலும் தமிழில் மொழிபெயர்த்து ஷை ஸ்ரீ புவனாம்பிகை பக்தஜனசபையாரு ளொருவராகிய மகா-௱-௱ சேஷய்யரவர்களால் அச்சியற்றி வெளிப்படுத்தப்படும் "பிளேக் அம்மை விலக்கௌஷத சங்கிரகம்" என்னும் புத்தகத்திலும் ஷை சுவாமிகள் அடியாருளொருவராகிய திரிசிரபுரம் டிராபிக்மானேசராபிஸ் ரைடர் மகா-௱-௱ இராமசாமி நாயுடவர்களால் இனி செய்விக்கப்படும் அங்கிலேய தர்ஜமாவிலும் விவரமாய்க்காணலாம்.

இங்ஙனம்,

ஜெ. என். வேணுகோபால்.

உ

திருவருட்சகாயம்.

சற்குருவே நம.

# பிளேக் அம்மை பூர்வரூபம்.

## நூல்.

இவ்வம்மைநோய் உமாகலாஞானத்தில் பதினெண் விதமெனவும் சொல்லியிருப்பதால் இந்நோய்க்கென்று அகத்தியமகாமுனிவரருளிய நூற்கோவைகளில் பதினொருவிதமென்றே திருவாய்மலர்ந்திருப்பதால் அதனையே ஆதாரமாகக்கொண்டு ஈங்கரையலாயின.

அகத்தியரருளிய வைசூரி சூத்திரம் எட்டினுள் 5-வது செய்யுள்.

பாரப்பா வம்மையால் கொள்ளை நோயால்
பகற்காற்று விஷத்தினால பயத்தினாலும்
சேரப்பா வமிருத்தைத் தீர்க்கவென்றே
செப்பினேஞ் செந்தூர மூன்னூற்றுக்குள்
கோரப்பா பெருநூலெண்ணாயிரத்துங்
கூறினேம் மிருத்தகலுங் கொள்கை யெல்லாம்
தேரப்பா வந்நூலு மெண்ணூறோடு
சிறப்பான வைசூரி யெண்பதுவுங்காணே.

அகத்தியரருளிய வைசூரி எண்பதில் 3-வது செய்யுள்.

ஆமென்ற வைசூரி வருவதேது
அதனுடைய காரணத்தை யறைவோமென்றால்
வேமென்றசரீரத்தில் வேகமிஞ்சி
வெக்கையொடு தேகமெலாஞ் சூடேகொண்டு
காமென்ற மூளையதில் கொதிப்புமீறிக்
கனமானவஸ்தியதைத் துளைத்துக்கொண்டு
பாமென்ற பதினொரு ரோகமாகிப்
பதிவாகத்தேகத்தில் பதிந்தவாறே.

## இவை தோத்து வியாதியே யென்பது.

வாமுன வைசூரியது கண்டபேரை
 வளமாக மற்றொருவர் கண்டபோதே
தேருமற் பயஞ்சனித்தி ருதயத்திற்
 திறகமாக் கலக்கமது சேர்ந்ததானல்
சீருனவைசூரியது நிமிஷத்துள்ளே
 சேர்ந்தவர்தஞ் சரீரத்துந் தொடர்ந்து கொள்ளும்
மாறுமல் பதினென்றின் பெயரைக் கேட்கின்
 வளமாகச் சொல்லுகிறேன் வணங்கிக்கேளே. (௭)

## வைசூரி பதினென்றின் நாமமின்னதென்பது.

கேளப்பா பதினென்றின் பெயரைத் தானுங்
 கெடுதியாம் பனைமுகரி பாலம்மை யென்றும்
வாளப்பா வரகுதிரி கொள்ளம்மை யென்றும்
 வளமானகல்லுதிரி கடுகம்மையாகும்
தேளப்பா மொழுக்கடனுப் புதிரிதானுந்
 திரமானகரும்பனசை வெந்தயமுமாகும்
பாளப்பா பாசிபயற்றம்மையோடு
 பதினென்றும் பெயரினையும் பகர்ந்துளோமே (௮)

இவற்றின் குணங்குறிகளைத் தனித்தனியே கூறுமிடத்துப் பெருகு மாதலானவற்றில் முக்கியமான பனைமுகரி மொழுக்கம்மை யென்னுமிரண் டேதற்காலம் வியாபித்திருக்கும் "பிளேக்" என்னுங் கொடியநோய்க்கொத் திருத்தலாலு மெண்ணுயிரத்து மிவ்விரண்டைமட்டுமே அசாத்தியமென்று மிவைச் சிலகாலத்தில் மட்டும்பூர்வமாயுலகத்தில் வியாபிக்குமென்றுஞ் சொல்லப்படுவதால் இவற்றின் குறிகளைமட்டு மீங்கெடுத்துரைக்கலாயினோம்.

## பனைமுகரியின்குணம்.

பகருவோமிவைகளிட குணத்தைக்கேளு
 பரிவானபனைமுகரி வந்ததானல்
நிகரில்லா காய்ச்சலது முன்னே காணும்
 நேரானவுடல் கடுக்குங் கண்சிவக்கும்
பகருவதேன் கண்டதுண்டங் கட்டிகாணும்
 பழையதொரு ரத்தமெலா முறையச்செய்யும்
செகமதிலே பித்தப்பை கலங்கிப்போகுஞ்
 சன்னியதுங் கூடவந்து சாடுங்காணே. (௯)

## மொழக்கம்மையின்தணம்.

செய்யப்பா மொழுக்கனுட குணத்தைக் கேளு
  செயலானகாய்ச்சலது சீராய்க்காயும்
ஐயப்பாவுடம் பெல்லாங் கடுப்பெடுத்து
  அழகான விடுப்பதுவும் விளங்காதப்பா
நொய்யப்பா நாவதுவும் வெளுத்துப்போகும்
  நொடிப்பொழுதில் புத்தியெலலாங்கலங்கச்செய்யும்
மெய்யப்பா சரீரமதில் கட்டிகாணும்
  விளங்கவே யேழாநாள் கொல்லுந்தானே. (எ

## அகத்தியாருளிச்செய்தஎண் ணூறு.

எண்பதனிற் சொன்ன வைசூரிப்பேதத்தி
  லிரண்டுமெட்டும் சாத்தியத்தில் சாத்தியமாகும்
புண்படுத்துஞ் சிகிச்சை செய்யாவிடினுந்தானே
  போந்திறங்கும் * விடேசியினும் பொல்லாதப்பா
திண்படுத்து முகூர்த்தமொரு பத்துக்குள்ளே
  சீவனைட்போக்கிவிடும் திடமாய்க்காண்பாய்
விண்படுத்தும் பனிமுகரி மொழுக்கனாலே
  வெகுவாதை மானிடர்க்கா விளம்பினேமே. (கூ

விளம்பக்கேளெண்பதுக்குள் விதித்த வண்ணம்
  வெக்கைமிஞ்சி ரத்தமது வெகுவாய்க்கெட்டுக்
களங்கமுற்ற மாதர்களைச் சேரலாலுங்
  கண்டபுலாலதனை மிகவுண்ணலாலும்
வளமான தருமநெறி மறத்தலானும்
  வாக்குசுத்தி தேகசுத்தி வழுவலானும்
குளங்கிணறு கூவநீர் குற்றத்தாலும்
  குளிர்மிகுதியாலுமிவைக் கூடுந்தானே. (ஜ

கூடுகின்ற நிலபேதக் கொதிப்பினாலுங்
  குளிர்மிகுந்த பூகாசக் கொடுமையாலுஞ்
சாகுகின்ற மலசலத்தை யடக்கலாலுஞ்
  சாதகமாய்ப்போதைவஸ்து மிகுத்தலாலும்
வீடுகளில் நிறைந்திடு துற்கந்தத்தாலும்
  விஷப்பூச்சி விளைவாலும் விலக்காஞேர்பால்
நாடுகின்ற செயலாலு மம்மையென்ற
  நலமிலாவியாதிகள் வந்தணுகும்பாரே. (கூ

---

* விஷபேதி

**அம்மைநோய் கண்டபேரைத் தனித்துவைக்கவேண்டுவ தவசியமென்பது.**

தானென்ற வைசூரியதி லெதுகண்டாலும்
  தனித்த விடந்தனிலமைத்துப் புனிதமாகத்
தேனென்ற வெண்பதினிற் சொன்னவாறு
  செய்யு மௌடதங் களினுற்றீருமத்துள்
கோனென்ற பனைமுகரி மொழுக்கன் மட்டுங்
  கூட்டோடே விட்டோடும் கோள்கள் செய்யுங்
வானென்ற கோவை நூலெண்ணுயிரத்தில்
  வசனித்தோ மிதன் விவரம் வகையாய்ப்பாரே. (௩௱௩௬)

அது, நாலாங்காண்டம் ௩ - ம் பிரிவு, எஎ - வது செய்யுள்.

பாரப்பா புலத்திய மாரிஷியே யய்யா
  பாடில்வைத்த செந்தூரமுந் நூற்றுக்குள்
சீரப்பா முனிவர் சித்தர் தபோதனர்க்குந்
  தேகசித்தியாவன்சிலுகு நேர்ந்தால்
தேரப்பா வமிர்த்தை விலக்கவென்றே
  செந்தூர மொன்று சொன்னே மதனைச்செய்தே
ஊரப்பா விருப்பவர்க்குக் கொடுப்பாயானு
  * வாழிமுதலம்மையும் வந்தொண்டாதாமே. (எஎ)

ஒண்டுகின்ற வவமிருத்தாம் விடத்தின்றத்து
  மூழியென்ற சாமளையினுறமு மண்மீ
துண்டாகு மம்மையினல் வருத்துந்தத்து
  முற்றநாலாயிரத்து நானூற்றேடும்
மிண்டான நாற்பத்தோடெட்டு நோயும்
  வேகமிஞ்சிய வுடதத்தால் விளைந்ததத்தும்
விண்ணுரும் போற்றியமும் மலர் செய்யுங்கால்
  விளைகின்ற தோஷமகன்றிடும் வித்தாமே. (எஅ)

வித்தான பனைமுகரி மொழுக்கன் கண்டால்
  விடிவேறு புத்தியினில் மந்தமுண்டாம்
சத்தியுடன் சுரமும் வெகுசாக்காணுந்
  தலைநோவும் முதகு துடை மூழிகள்தோறும்
மெத்தவும் நோயுண்டாகுங் கண்ணிரண்டும்
  விருந்திடுஞ் செவ்வகத்தி யுடமலரேபோலாம்

* விஷபேதி

தொத்துவியாதிக்குளி தேயரசனுருந்
　* தொடுஞாயிருமிதன் சீர்சொல்லக்கேளே. (எக)

சொல்லுமெனக் கேட்டுவந்த மாணுக்காமுன்
　துவாதசநாட்குளிதுவுந் தொடரும்பேர்க்குப்
பல்லுகளினீருகளில் நோவுங்காணும்
　பலவிதமாம் ருசியினையதும் நாவுதன்னில்
மெல்லவே வெள்ளை நிறமாகக்காணும்
　விக்கலுண்டாம் தொண்டையினில் விழுங்கவொட்டா
கொல்லவந்த விக்குறிகள் கண்டபோதே
　குடிசுகட்டித் தனியிடத்தில் கொண்டுவையே. (அஎ)

வையப்பா தனித்தவிடமதனிலன்னோரை
　வைத்துவிட்டுப்பத்திரமாய் மருந்தைச்செய்நீ
பொய்யப்பா வெண்பதிலே சொன்னபோக்குப்
　போலவே செய்யதற்கு மீதிற்றென்ருல்
மெய்யப்பா முந்நூற்றில் காந்தசத்தை
　மெதுவாக செந்தூரித்துள்ளுக் கீந்தால்
செய்யப்பா மிருத்தேது மொழுக்கனேது
　தீராதவிஷமேது செய்துபாரே. (அக

{ அகத்திய மாமுனிவரருளிய அது, ஆறங்காண்டம்.
{ இரண்டம்பிரிவில் அம்மைநோய்க்கு ஔஷதம். }

செயலான மொழுக்கம்மைகாணு முன்னே
　தீப்போலுஞ் சுரங்காயு மந்தவேளை
நயமாக சிகிச்சைசெய்யாவிடிலோ வுள்ள
　நரம்பனைத்துந் தளர்ந்துவிடுங் கட்டிகாணும்
கயமான சேத்துமத்தில் பித்தமோடிக்
　கலந்ததானுல் கிருமியுமாம் நீருங்கெட்டுப்
பயமிகுத்தவதனுலுமவனைச்சுற்றிப்
　பகரும் விஷக்காற்று மிகப்பரவலானும். (ாகூ)

பரவுமிடந்தோறு மிதுதொத்திக்கொள்ளும்
　பகரவொண்ணுச் சந்நியுமந்நிமிடங்காணும்
அரவுவிடந்தானு மிதற்கீடோ வப்பா
　அவுஷதமுஞ் சொல்லுகிறே னன்பாய்ச்செய்நீ

* தொடுஞாயிறென்பது - தொத்துங் குணத்துடைத்து.

சிரமமிலே சீந்திலவேம்பு சுக்கு
சிறுகுறிஞ்சான் குறுந்தொட்டி நிம்பவீர்க்குத்
தரமிகுத்த வில்வவேர் சித்தாமுட்டி
தருமாடா தோடைப் பேய்ப்புடலுமாமே. (௱௪)

ஆமப்பா பசும்பயருஞ் சிறுதேக்கோடு
மழகிய பற்பாடகந் தூதுவேளை
தாமப்பா குருவிஞ்சி முத்தக்காசு
தனித்தனியே கழஞ்சியொன்று சரியாய்ச்சேர்த்துத்
தேமப்பா நாலுபடி சலத்துள்விட்டுச்
சிவந்தபதமாய்க்கியாழம் தெளிதல்கண்டு
ஓமப்பா தீட்சைசெய்த பூநீர் தன்னில்
ஒருபணமிட்டுண்டு விடுவுதயந்தானே. (௱௫)

உதயமிந்தப்படிசெய்து புளியைத்தள்ள
வொருமூன்று நாளினிற் சுரமுந்தீரும்
அதுவுமன்றி ஒருவேளை * குருத்தான் கண்டா
லருளுவோம் சங்கம்வேர் பட்டைத்தாளும்
மிதமான மிளகுடனே வெள்ளிலோத்திரம்
விதித்தபடி வகைக்குக் காற்பலமே சேர்த்து
இதமாகச்சூரணித்துப் பசுநெய்தன்னி
லிரண்டுபொழு தருந்திடவே யினிதாம்பாரே. (௱௬)

## கட்டிக்குமேற்பூசுமருந்து.

பாரப்பா கொல்லனுட கோவைமூலம்
பருமிளகுஞ் சமனிருத்துக் * குமரிப்பாலால்
சீரப்பா வரைத்ததனைக் கட்டிமேலே
சிறப்புடனே பூசிவிடு தீர்ந்துபோகும்
பேரப்பா சுண்டைமணத்தக்காளிக்காய்
பிரண்டையுடன்கரிக்கருணை
கூரப்பா பத்தியத்திற் கிதனைவிட்டுக்
கூட்டாதேமற்றதெலாங் கொடுமைதானே. (௱௭)

தானுக விவ்விதமாம் நோய்கண்டாரைத்
தனித்துவைத்துத் தீபமொன்று சாற்றக்கேளு

---

* குரு - கட்டி

* குமரி - சோற்றுக்கற்றாழை.

வேருன நிம்பவெண்ணெ யகலிலிட்டு
விரணீளவத்திதனில் பன்றிவிட்டை
கோணுகக் கொண்டுவந்து தூளதாக்கிக்
குழற்கெந்தியுஞ் சரியாகக் கூடக்கூட்டி
வாணுகத்திரிதிரித்து விளக்கிலிட்டு
வைத்திருக்கும் புகையதனுற் கிருமிசாமே. (ரா

சாமம்பா கிருமியதாம் விஷநீர்போனல்
தனித்தவுரியிலை ரசத்தில் கற்பூரத்தை
நாமப்பா வரைத்ததையோர் தூசிற்பூசி
நாலுதினம் புண்ணதின்மேல் நலமாய்ப்போட்டால்
போமப்பா வதன்மேலே புளியம்வித்தில்
பொதிந்திருக்குந் தோலதனைப் பொடியாய்ச்செய்து
தேமப்பா தேங்காயைத்திருவல் செய்து
சேர்த்தழுத்த தையிலம்வருந் தெளிவாய்க்கேளே. (ராக

கேளப்பா தைலமதில் குந்திரிக்கம்
கெடியாகவே பொடித்துக்காய்ச்சிக்கொண்டு
மீளப்பாநல்லசலமத னுள்ளிட்டு
மெதுவாகக்கடைந்திடு நீ வெண்ணெய்போலாம்
பாளப்பா போகாமல் துணியிற்பூசிப்
படிந்தவொரு புண்ணதனிலிட்டா யாகில்
தேளப்பா கொட்டுதலே போலாங்கட்டி
செம்புண்ணுய்த்தழும்பாகித் தீர்ந்துபோமே. (ரா

தேரையருளிச்செய்த வைத்தியம் நூற்றிலும் 92-வது செய்யு முதல் 95-வது செய்யுள்வரையிலுங் காண்க.

முற்றிற்று

---

# விளம்பரம்

இதை வாசிக்கும் நண்பர்களுக்குத் தெரிவிப்பதி யாதெனில் மகா பயங்கரமாகிய இந்நோயின் வரலாறு மவற்றினுக்குத்தக்க ஔஷதமுமிதனுள் யாவருஞ்சுலபமாகத் தெறிந்துய்யும் பொருட்டுப்பிரசுரப்படுத்தினது மன்றி, அநேகபண்டிதர்களாலுஞ் சிற்சில கனவான்களாலுங் கேட்டுக்கொண்டபடி அவமிருத்து முதலாகத் தீர்க்கத்தக்கதும் அதிஅற்புதமானதும் மிகவிலைபெற்றதுமான இதிற்கூறிய செந்தூரமுந் தயார்செய்யப்பட்டுவருகிறது. எண்ணெயிரத்திற் சொல்லிய கஷாயத்துக்கு மேல்மருந்தாகிய பூநீரும் தயார்செய்து ஸ்ரீமத் ஞானசித்த சுவாமிகள் மடாலயத்தில் ஜெ - என் - வேணுகோபாலு நாயடுகாரவர்களிடம் வைக்கப்பட்டிருப்பதால் வேண்டியவர்கள் அடியிற்கண்ட சரசமானவிலைக்குப் பெற்றுக்கொள்ளலாம். சாப்பிடும் விதமு   னுபானமு மருந்துடன் தெரிவிக்கப்படும்.

௧ - நாள் - ௨ - பொழுதுக்கும் - ௨ - பணவிடை ரூ 2 6 0

இப்புத்தகம் வேண்டுபவர்க ளடியிற்குறித்தவர்களிடத்தி லினமாகப் பெற்றுக்கொள்ளலாம்:—

சென்னைமுல்லாவீதி அஷ்டாவதானம் கலியாணசுந்தர முதலியாரவர்கள்.

ஷை ரங்கநாதர் கோவிற்கெதிரில் விசுவநாத முதலியாரவர்கள்.

கோயமூத்தூர் பாங்கி ஆபீஸ் ரயிட்டர் இராமசாமி ஐயரவர்கள்.

ஷை யூர் திருவேங்கடசாமி முதலியாரவர்கள் காரியஸ்தர் இராமண்ணு அவர்கள்.

ஷை யூர் மகாவித்வான் கந்தசாமி முதலியாரவர்கள் குமாரரும் திருச்சிற்றம்பலம் பிள்ளை அவர்கள் மாணுக்கருமாகிய சுப்பிரமணியமுதலியாரவர்கள்.

ஷை வேட்டக்காரன் புதூர்டிஸ்டிரிக்கட்டு சுப்பராய முதலியாரவர்கள்.

ஷை போளியாம்பாடி சருணீகர் ஆறுமுகம் பிள்ளையவர்கள்

கொடிமுடி ரெவநியூ இனிஸ்பெக்டர் வெங்கடாசாரியாரவர்கள்

காங்கேயம் வக்கீல் நாராயண ஐயரவர்கள்.

கரூர்மாஜி மணியக்காரர் கிஷ்ணசாமி நாயுடு அவர்கள்.

மேட்டுபாளையம் லோகல்பண்டு ஓவர்சியர் அங்கப்பிள்ளையவர்கள்.

நீலகிரி ஒத்தை ஸ்பென்சர்கம்பெனி ரயிட்டர் ஸ்ரீராமுலு நாயுடவர்கள்.

ஷை குன்னூர் ரயில்வேசிப்இன்சினீர் ஆபீஸ்ரயிட்டர் வேலாயுதம் பிள்ளை அவர்கள்.

சேலம் ஒட்டப்பட்டி பொன்னம்பலம் பிள்ளையவர்கள்

ஷை பாகல்பட்டி ஜெமின்தார் கிஷ்ணசாமிநாயுடு அவர்கள்.

ஷை இளம்பள்ளி ஜமின்தார் சொக்கலிங்கம் செட்டியாரவர்கள்.

பெங்களூர் கோட்டை போஸ்டாபீஸ் சிக்நலர் பஞ்சாபிகேச அய்யரவர்கள்.

கோலார் அடுத்த உரிகம் கோல்ட்மயனிங்கம்பெனி ரயிட்டர் சுப்ரமணியப்பிள்ளை அவர்கள்.

திரிசிரபுரம் கோட்டைகுருவியன் குளத்தெருவு கலெக்டர் ஆபீஸ் ரயிட்டர் இரத்தினம்பிள்ளை யவர்கள்.

ஷை யூர் பென்சன் சர்வேயர் பொன்னுசாமி பிள்ளையவர்கள்.

சிதம்பரம் உலகமூர்த்தி மடாலயம் முத்துக்கருப்பகுருக்களய்யா அவர்கள்

திருவாதி ஆர். பி சே. சாமி கம்பெனி பாலகிருஷ்ணசாமி யவர்கள்.

மதுரை முனிசிபல் கவுன்சலர் சுப்புராயலு நாயுடவர்கள்.

தூத்துகுடி முனிசிபு கோர்ட் வக்கீல் ஆறுமுகம்பிள்ளை யவர்கள்.

திருநெல்வேலி செசக்கிநகுளம் கலெக்டர்ஆபீஸ் எட்டுமச்சி கண்ணுசாமி நாயுடு அவர்கள்.

கோபால சமுத்திரம் சண்முகதாச பிள்ளையவர்கள்.

மேலப்பாளையம் பலசரக்கு வியாபாரம் நத்தம் பூவநாதபிள்ளை யவர்கள்.

ஆள்வார் திருநகரி தெற்குரதவீதி ஆ. லே. சுந்தரசாஸ்திரியாரவர்கள்.

ஷை யூர் ஷை தெருவு வீரராகவ ஐயங்காரவர்கள்.

தென்திருப்பதி கவிராயர் அனந்தகிஷ்ண ஐயங்காரவர்கள்.

ஆற்றூர் கிராமமுனிசிபு செல்லம் பிள்ளையவர்கள்.

ஷை யூர் புதுகிருமம் கோபாலய்யரவர்கள்.

திருவாங்கூர் கொல்லம் கே. வாசுதேவராயரவர்கள்.

ஷை கோட்டார் சூபர்வைசர் சந்திரபானுலாலா அவர்கள்.

பர்மா மார்டலே டிப்டிகமிஷனர் ஆபீஸ் ரயிட்டர் பங்காருசாமி நாயுடு அவர்கள்.

கொளம்பு ஐ. அ. உசன் சாயபு கம்பெனியில்அபீர்தீன் சாகிபு அவர்கள்.